REGD. No. M. 6311 ★ தனி இதழ் 1 அணு ★ இலங்கையில் 10 சதம் ★ 'PHONE: 55630

# நம் நாடு




The "Nam Nadu" A Tamil Daily. ★ The Official Organ Of The D.P.F.

மலர் 3] சென்னை: ஆனி 1உ புதன் (15—6—55) ★ ★ வெளியூர்: ஆனி 2உ வியாழன் (16—6—55) [இதழ் 1

## தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு உபகாரச் சம்பளம்

தாழ்த்தப்பட்ட வகுப்பினர், மலைசாதியினர், மற்ற பின் தள்ளப்பட்ட வகுப்பைச் சேர்ந்தவர்கள் ஆகியோருக்கு 1955—56-ல் கல்விக்காக ஒரு கோடி முப்பது லட்சம் ரூபாய் உபகாரச் சம்பளம் வழங்க இந்தியப் போ-சு முடிவு செய் திருக்கிறதாம்.

பத்தாவது வகுப்புக்குமேல் கல்வி போதிக்கும் இந்தியா வில் உள்ள அங்கிகரிக்கப்பட்ட கல்வி நிறுவனங்களில் பயில இந்த உபகாரச் சம்பளம் வழங்கப்படும் என்று தெரிய வருகிறது.

# 'செயற்கை உரம் தயாரிக்கலாம்'

## உணவுக் கட்டுப்பாடு இனி வராதாம்!

### மத்திய மந்திரியின் உறுதி

"மாநில, மத்திய அரசாங்கங்கள் ஏராளமான உணவுப் பொருளை ஒதுக்கி வைத்திருப்பதால், நாட்டில் இனி உணவுப் பொருளுக்கு கட்டுப்பாடு ஏற்பட மாட்டாது," என்று மத்திய அரசாங்க உணவிலாகா துணை அமைச்சர் எம். வி. கிருஷ்ணப்பா தெரிவித்திருக்கிறார்.

"இந்தியப் போரசிடம் மட்டும் ரூ. ஒரு கோடி பெறுமான 16 - லட்சம் டன் அரிசி கையிருப்பில் உள்ளது; நெருக்கடி நிலை ஏற்பட்டாலும் கூட இந்த இருப்பு நாடு முழுவதுக்குமாக இரண்டு ஆண்டுகளுக்கு போதுமானதாகும்; நாட்டின் எந்த ஒரு பகுதியிலேனும் மழை பெய்யாவிட்டாலும் உணவுக் கட்டுப்பாடு கொண்டுவரப்பட மாட்டாது," என்றும், அவர் உறுதியளித்திருக்கிறார்.

## ரஷ்யாவில் நேரு

ரஷ்யாவில் உல்லாசச் சுற்றுப் பயணத்தில் ஈடுபட்டிருக்கும் இந்தியப் பிரதமர் பண்டித நேரு டாஷ்கென்ட் போய்ச் சேர்ந்திருக்கிறார்.

இதற்கு முன்னர் நேருவும், குழுவினரும் கிரிமியாவிலிருந்து ஜார்ஜியா குடியரசின் தலைநகரான டிபிலிசிக்கு சென்றிருக்கின்றனர்.

சரித்திர முக்கியத்துவம் பெற்ற யால்டாவிலிருந்து தென்கிரிமியாவிலுள்ள ஸிம்ராபோல் நகருக்கு மோட்டாரில் வந்து, அங்கிருந்து டிப்லி சென்றிருக்கிறார்.

அங்கெல்லாம், வழக்கமான ஆடம்பர வரவேற்புத் தரப்பட்டிருக்கிறது.

## 'அலுமினியத் தொழிற்சாலையைத் துவங்க முடியும்'

## 'காகித தொழிலை உருவாக்க வசதியுண்டு'

## 'சர்க்கரை ஆலைகளை ஏற்படுத்த இடமிருக்கிறது'

## ஆனல்? ஆனல்? ஆனல்?

சென்னை, ஜூன் 15—

"சென்னை மாநிலத்தில் எந்தெந்தத் தொழில்களைத் துவங்கி வெற்றி காண முடியும்? அவைகளுக்குத் தேவைப்படும் மூலப் பொருட்கள், தொழில் துறை நிபுணர்கள், முயற்சி, துணிவு ஆகியவை இருக்கின்றனவா?"

இக்கேள்விகளைக் கேட்டுவிட்டு, சென்னை அரசாங்கத் தொழில் துறை ஆணையாளரான டி. எம். எஸ். மணி அவர்கள், ஆதரவான பதிலையும் தந்துள்ளார்.

"பழுப்பு நிலக்கரியிலிருந்து மின்சாரப் பெருக்கம், செயற்கை உர உற்பத்தி, எரி பொருள் உள்ளிட்ட பல தொழில்களை நிர்மாணிக்க முடியும்."

"சேர்வராயமலையில் கிடைக்கும் 'பாக்சைட்'டைக் கொண்டு அலுமினியத் தொழிற்சாலையை நிறுவ முடியும்."

"மின்சாரக் கருவிகள், காகிதம் ஆகிய இரண்டுக்கும் தொழில் நிலையங்களை ஏற்படுத்த முடியும்."

"கைத்தறிகளையும், நூற்பு ஆலைகளையும் விரிவாக்க முடியும்."

"சர்க்கரை, சிமெண்ட் ஆகிய பொருட்கள் பெருக்கத்திற்கு மேலும் தொழிற்சாலைகளைக் காண முடியும்."

"கண்ணாடி, தோல், உலோகப் பொருட்கள், இன்னோரன்ன பொருட்களை உற்பத்தி செய்ய ஏராளமான வசதி இருக்கிறது."

"குடிசைத் தொழில்களைப் பெருக்க அளவற்ற வசதி இருக்கிறது. இந்தப் பட்டியல் விரிவானதல்ல; வெறும் பொதுப்படையான சிறு குறிப்பேயாகும்."

இக்கருத்துக்களை, சென்னை ரோடரி சங்கத்தில் பேசிய டி. எம். எஸ் மணி தந்துள்ளார்.

கன்னிமாரா ஓட்டலில் நடத்தப் பெற்ற சென்னை ரோட்டரியர்கள் விருந்தில் கலந்துகொண்ட சென்னை அரசாங்க தொழில் துறை ஆணையாளர் டி. எம். எஸ். மணி அவர்கள், சென்னை மாநிலத்தின் தொழில் வளர்ச்சி ஒளிவிட்டுத் திகழும் நிலையில் இருப்பதாகவும், தொழில் வளர்ச்சிக்கான உதவிகள் அனைத்தையும் அரசாங்கம் செய்யத் தயாராக இருப்பதாகவும், குறிப்பிட்டார். மேலும் அவர் சொன்னர்:—

"இரண்டாவது உலகப் போருக்குப் பின்னர், தொழில் துறை அதிகமான கவனத்தைக் கவர்ந்திருக்கிறது; அரசாங்கத்திற்கும் திட்ட மனப் போக்கு ஏற்பட்டு இருக்கிறது.

"தொழில் மயமாக்கல், ஏற்றுமதி—இறக்குமதி, வர்த்தகம் ஆகிய இரண்டிற்குமிடையில் இணைப்பு இருக்கவேண்டியது மிக மிகத் தேவையாகிறது. திட்டமிடப் பட்ட முன்னேற்றத்திற்கு, தொழில் வளர்ச்சித் துறையை ஏதாவது ஒருவகை கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வர வேண்டியதின் அவசியத்தை ஒவ்வொருவரும் ஒப்புவர்.

"மூலதனமிடுவதில் கட்டுப்பாடு புகுத்தப்பட்டால் அல்லாது குறிப்பிட்ட ஒரே தொழிலில் மூலதனம் அனைத்தும் குவிந்து வரும் நிலை ஏற்படுவது எதிர்பார்க்கக் கூடியதேயாகும்.

"பொருட்களைப் பயன்படுத்துவோரின் வாங்கும் சக்திக்கு ஏற்ப, அதாவது சிக்கனமான உற்பத்தி ஏற்பாட்டை, தொழிலதிபர்கள், கவனத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். ஒவ்வொரு தொழில் நிறுவனத்திற்கும், அரசாங்கம் மூலதன உதவி செய்வது என்பது ஒருபோதும் இயலாது. குறுகிய அளவில்தான் அரசாங்கம் உதவி செய்ய முடியும்; ஆனல், முடியுமானல் கடன் கொடுக்கவும், மூலதனத்தில் பங்கு கொள்ளவும் அரசாங்கம் முன்வரும்.

"மேற்கூறிய தொழில்களையும், இன்னும் பற்பல விதமான தொழில்களையும துவங்குவதற்கு இன்றியமையாதத் தேவைகளாக உள்ள மூலப் பொருட்கள், தொழிலாளர்கள், தொழில் நிபுணர்கள் ஆகிய அனைத்தும் ஏராளமாக இருந்து வருவதாக தொழில் துறை ஆணையாளர் விளக்கிக் கூறியுள்ளார்.

'தொழில் வளர்ச்சி வெற்றிகரமாக ஏற்பட போதிய மூலதனம் கிடைக்க வேண்டும். அது மட்டும் கிடைத்துவிட்டால் சென்னை மாநிலத்தில் தொழில் வளர்ச்சி ஒளிவிட்டுத் திகழும்."

என்றும், அவர் மேலும் குறிப்பிட்டுள்ளார்.

## குடும்பக் கட்டுப்பாடு

### தகவல் சேகரிக்கப்படுகிறது

சென்னை, ஜூன் 14—

மக்கட்பேறு, குடும்பக் கட்டுப்பாடு ஆகியவை பற்றிய தகவல்களை முக்கிய நகரங்களில் திட்டக் குழு சேகரித்து வருகிறது.

சென்னை நகரில் ஒரு குழு இந்தத் தகவல்களைச் சேகரித்துக் கொண்டிருக்கிறது. 11 வட்டங்களில் இந்தத் தகவல் சேகரிப்பு வேலைகள் முடிந்துவிட்டதாகத் தெரியவருகிறது.

இந்த வேலை முழுவதும் 3 ஆண்டுகளில் முடிவடையும் என்று எதிர்பார்க்கப்படுகிறதாம்.

## கோவா விடுதலைப் போர்

### போர்ச்சுகல் எதிர்க் கட்சி ஆதரவு

பம்பாய், ஜூன் 14—

கோவாவிற்கு விடுதலை வழங்குவதற்கு போர்ச்சுகலில் உள்ள எல்லா எதிர்க் கட்சிகளும் விரும்புகின்றன; கோவாவில் நடைபெறும் விடுதலைப் போரை அவை ஆதரிக்கின்றன;

"போர்ச்சுகல் சர்க்காரின் கொடுங்கோன்மையினுல், அவை தம் கருத்தை பகிரங்கமாகத் தெரிவிக்க அஞ்சுகின்றன,"

என்று, நாடு கடத்தப்பட்டு சிறைவாசம் அனுபவித்து நாடு திரும்பியுள்ள கோவாவைச் சேர்ந்த டாக்டர் செய்டொண்டே குறிப்பிட்டிருக்கிறார்.

விமான நிலையத்தில் அவருக்கு மகத்தான வரவேற்புத் தரப்பட்டிருக்கிறது.

தன் தொழில் வைத்தியம் என்றும், ஆனல், சுதந்திரத்திற்காகப் போராடுவது தனது பிறப்புரிமை என்றும் அவர் கூறியிருக்கிறார்.

இங்கிலாந்தில் கடந்த 17 நாட்களாக நடைபெற்றுவரும் ரயில்வே தொழிலாளர்கள் வேலை நிறுத்தத்தை நிறுத்துவதென வேலை நிறுத்த தலைவர்கள் முடிவு செய்தனராம்.

## இந்தியா பெறும் ஏமாற்றம்

## லண்டன் புத்தகசாலை கிடைக்காதாம்!

'லண்டன் இந்திய அலுவலகத்தில் உள்ள புத்தகசாலை, பிரிட்டனிலேயே இருக்க வேண்டும்,' என்று பிரிட்டிஷ் சர்க்கார் உறுதி கொண்டிருக்கின்றனராம்.

இப்போது 'காமன்வெல்த்' உறவு இலாகாவின் பாதுகாப்பில் உள்ள கிழக்கிந்தியக் கம்பெனி பற்றிய பழைய தஸ்தாவேஜுகளும் பிரிட்டனில் இருக்க வேண்டியவைதான் என்று சர்க்கார் தெரிவித்திருக்கின்றனவாம்.

இந்தத் தகவல்கள், இங்கிலாந்து மக்கள் சபையில், காமன்வெல்த் உறவு மந்திரியால் தரப்பட்டிருக்கின்றன.

இந்திய அலுவலகப் புத்தகசாலை உலகிலேயே பெரிய கீழ்த்திசை புத்தகசாலை என்றும், அதில் 28,000 புத்தகங்களும், மற்றும் பல மதிப்புமிக்க தஸ்தாவேஜுகளும் உள்ளன என்றும், இந்தியா, பாகிஸ்தான் மட்டுமின்றி, மற்றும் பல கீழ்த்திசைநாடுகளின் சரித்திர, கலாச்சார, இலக்கிய வரலாறுகளும் உள்ளனவென்றும், உலகின் பல பாகங்களையும் சேர்ந்த அறிவாளிகளுக்கும், ஆராய்ச்சியாளருக்கும் அது பயன்பட்டு வருவதாகவும் காமன்வெல்த் உறவு மந்திரியான லார்டு ஹோம் குறிப்பிட்டிருக்கிறார்.

இந்தப் புத்தகசாலையின் நிர்வாகம், அதைப் பயன்படுத்துவது ஆகியவை பற்றி இந்தியா, பாகிஸ்தான் சர்க்கார்கள் ஏதாவது யோசனைகள் சொன்னல் அவற்றைக் கவனிக்கலாமெனவும் அவர் கூறியிருக்கிறார்.

இந்தப் புத்தகசாலை பற்றி புதுடில்லியில் பேச்சுவார்த்தைகள் நடைபெற்றதாக பத்திரிகைகளில் வெளியாகியுள்ள செய்தியைக் குறிப்பிட்டுக் கேட்டதற்கு, அவற்றில் பிரிட்டிஷ் சர்க்கார் கலந்துகொள்ளவில்லை என்றும், பிரிட்டனின் ஒப்புதலின்றி எவ்வித முடிவும் செய்ய முடியாதென்றும் அவர் தெரிவித்தாராம்.

## ஆலயங்களும் சட்ட சபைக்குள் நுழைய விரும்புகின்றன!

## அர்ச்சகர்கள் அகல வாய் திறக்கின்றனர்!

சென்னை, ஜூன் 14—

"இனிமேல் வர இருக்கிற பொதுத் தேர்தலிலாவது, சென்னை மேல் சட்டசபையில், ஆலயங்களுக்கும் அர்ச்சகர்களுக்கும் சர்க்கார் பிரதிநிதித்துவம் தரவேண்டும்."

மேற்கண்டவாறு ஒரு தீர்மானம் நேற்று நடைபெற்ற தென்னிந்திய அர்ச்சகர்கள் சங்கக் கூட்டமொன்றில் நிறைவேற்றப்பட்டிருக்கிறதாம்!

"மேல் சட்டசபையில் ஆசிரியர், பட்டதாரிகள், ஸ்தல ஸ்தாபனங்கள் ஆகியவைகளுக்குத் தனித் தொகுதியளித்தும், அரிசனங்கள், சிறுபான்மையினருக்கும் பிரதிநிதித்துவம் அளித்தும் இருக்கிற போது, சுமார் 50,000 ஆலயங்களுக்கு சர்க்கார் பிரதிநிதித்துவம் அளிக்காமல் இருப்பது வருந்தத்தக்கது; எனவே இனிமேல் வரும் மேல்சட்டசபைதேர்தலுக்குள்ளாக ஆலயங்கள் தொகுதியிலிருந்து ஒரு அர்ச்சகரைத் தேர்ந்தெடுக்க வழிவகைகள் செய்யவேண்டும்," என்றும் அத்தீர்மானத்தில் மேலும் கேட்டுக்கொள்ளப்பட்டிருக்கிறதாம்!

## 100 தோலா கள்ளத் தங்கம் பிடிபட்டது

கல்கத்தா, ஜூன் 14—

நேற்று டம் டம் விமான நிலையத்தில் வந்திறங்கிய பாகிஸ்தான் விமானமொன்றின் இறக்கையில் ஒளித்து வைக்கப்பட்டிருந்த ரூ. 9,000 மதிப்புடைய 100 தோலா தங்கம் சுங்க அதிகாரிகளால் கைப்பற்றப்பட்டதாகத் தெரிகிறது.

கண்ணாடிப் பெட்டியில் மறைத்து வைக்கப்பட்டிருந்த இந்தத் தங்கத்துடன், ரூ. 500 பாகிஸ்தான் கரன்சிகளும் இருந்தனவாம்.

Best copy available.

நம் நாடு
தி.மு.க.தின இதழ் — ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்
சென்னை 15—6—'55 புதன்

# மூன்றும் ஆண்டு

'நம் நாடு' இரண்டு ஆண்டு பக்குவத்தைக் கழித்துவிட்டது; மூன்றும் ஆண்டில் இன்று நுழைந்திருக்கிறது.

முதல் ஆண்டில் துவங்கப்பட்ட ஒரு திங்களில், அறப்போர்க் களச் செய்திகளைத் தாங்கிவரும் கட்டாயம் 'நம் நாடு' இதழுக்கு ஏற்பட்டது. அன்று அமைச்சராக இருந்த ஆச்சாரியார், அப்பெரும் பொறுப்பான பணியை 'நம் நாடு' மீது திணித்தார் வலுக்கட்டாயமாக.

இதழ் உருவில் சிறியது; வயதில் குழவி; இருந்தாலும் அது திராவிட இன மக்களுக்கு, உருவில் பெரிய ஏடுகளும் செய்ய அஞ்சும் பெரும் சேவையைச் செய்து இருக்கிறது.

எடுத்துக்கொண்ட பணியினைத் திறம்படச் செய்திருப்பதுடன், சேவையில் மகத்தான வெற்றியும் பெற்றிருக்கிறது.

திராவிட இனத்தை மீண்டும் அறியாமை இருட்டறையில் தள்ளி மூட, கல்வித் துறையில் தனது நாச கரத்தை நீட்டினார் ஆச்சாரியார். இதுவரை வரலாறு காணாத புதுமையை, தனது புதிய கல்வித் திட்டத்தால் செய்துகாட்டப் போவதாக அமைச்சர் ஆச்சாரியார் கொக்கரித்தார்!

அவர் கொக்கரிப்பு பெரும் அழுகுரலாக மாற்றப்பட்டது; அவர் காண இருந்த அற்புதம், அவரே அதிர்ச்சியடையும்படி அறவே அழிக்கப்பட்டுவிட்டது.

அவர் கொட்டத்தை ஒடுக்க, அவர் சாதிக்கக் கருதியதைத் தடுத்து நிறுத்த, 'நம் நாடு' எடுத்துக்கொண்ட முயற்சி எழுத்தளவில் இருப்பதாயினும் வரலாற்றில் இடம் பெற்றுவிட்ட ஒன்றாகும்.

மிகை என எண்ணுவர் அவசரக்காரர்; வீண் தற்பெருமை எனக் கருதுவர் அழுக்காறு கொண்டோர்; ஆனால், அவர்கள் ஆச்சாரியாரின் அடக்குமுறையின் வேகத்தையும், தலைவர்கள் அனைவரும் சிறையில் தள்ளிப் பூட்டப்பட்டுவிட்டதையும் ஒருபக்கத்தில் நிறுத்தி, 'நம் நாடு' புரிந்த பணியையும், புதிய கல்வித் திட்டம் பெற்ற தோல்வியையும் மற்றொரு பக்கத்தில் நிறுத்தி சீர் தூக்கிப் பார்ப்பார்களானால், 'நம் நாடு' சேவையால் கிடைத்துள்ள பெறுதற்கரிய வெற்றியின் தன்மையை ஒருவாறு உணர்ந்து கொள்வர் என்பது உறுதி.

எதிர்பாரா வகையில், தலைவர்களை அமைச்சர் ஆச்சாரியார் சிறையில் தள்ளி மூடிவிட்டார். ஒவ்வொரு மாவட்டத்திலும், இயக்கத் தூண்கள் காவலில் வைக்கப்பட்டுவிட்டன.

தூத்துக்குடியில் துப்பாக்கிப் பிரயோகம்; நால்வர் சுட்டுக் கொல்லப்பட்டனர்! தடியடிப்பிரயோகம்; பலர் காயம் பெற்றனர்!

கல்லக்குடியில் துப்பாக்கிப் பிரயோகம்; இரு இளைஞர்கள் மரணமுற்றனர்! கால் இழந்தனர், கரம் துண்டிக்கப்பட்டனர் என்ற வகையில் சோகச் செய்திகள் வந்தவண்ணம் உள்ளன!

மதுரை சந்திப்பில் புகைவண்டிகள், மேற்கொண்டு செல்ல முடியாமல் நின்றுகிடக்கின்றன. திருச்சிக்கு வரவேண்டிய புகைவண்டிகள், பலமணி கழிந்துபோன பின்னரும் வந்துசேரவில்லை. இப்படி போர்க்களச் செய்திகள் வந்துகொண்டிருந்தன.

'நம் நாடு' இச்செய்திகளைத் திரட்டித் தந்தது. களத்திலே நடைபெறும் சம்பவங்களை சிறையிலே உள்ளவர், மனக் கண்முன் கண்டு, 'ஜெயமுண்டு பயமில்லை' 'வெற்றி நமதே' என நம்பிக்கை கொள்ளும் வகையில் 'நம் நாடு' பணியாற்றி இருக்கிறது.

ஆயிரக் கணக்கானவர்களை காவலில் பூட்டிவிட்டு, கழகம் செத்துவிட்டது—இன முழக்கம் இனி கேட்காது—திராவிட இன உரிமைக் குரல் இனி முழங்காது—என அமைச்சராயிருந்த ஆச்சாரியார் அகமகிழ திட்டமிட்டிருந்தார். ஆனால், அந்தோ! ஆச்சாரியார் தோல்வி கண்டார்! அதுவும் முழுத் தோல்வி கண்டார்! 'நம் நாடு' சேவை, அவரை வெட்கித் தலைகுனியச் செய்திருக்கிறது! மிரட்சி கொள்ள வைத்திருக்கிறது!

திராவிட இனத்தின் போர்க்குணம் அறியாது, நமது தி. மு. கழகக் காளையர்களின் நெஞ்சுரம் தெரியாது, நமது கழகக் கோட்பாட்டின் புனிதத் தன்மை புரியாது, முதலில் நம்மவர் மீது அடக்குமுறையைக் கட்டவிழ்த்துவிட்ட கனத்தை, கண்ணீர் சொரிந்து தோல்வியைக் கட்டித்தழுவும்படி சிறிய ஏடான 'நம் நாடு' செய்திருக்கிறது என்பதை எவராலும் மறுக்க முடியாது.

ஆச்சாரியார் ஏவிய அடக்குமுறையால் கழகத் தலைவர்கள்—ஊழியர்களிடை இருந்து வந்த நேரடி தொடர்பு அறுபட்டு விட்டது. அதனால் ஏற்படக்கூடிய இன்னல்கள்—இடர்பாடுகள் ஏற்படாவண்ணம், 'நம் நாடு' பிரித்துவைக்கப்பட்டிருந்த தலைவர்களுக்கும் ஊழியர்களுக்கும் இடையில் பலம் பொருந்திய தொடர்பை ஏற்படுத்தி இருக்கிறது.

'நம் நாடு' உருவில் மிக மிகச் சிறிய ஏடு. பிறரைக் கவரும் வகையில் அதன் வனப்பு இருக்கவுமில்லை.

இருந்தாலும் அமைச்சர் ஆச்சாரியாரின் அக்கிரம ஆட்சியை விரட்டி இருக்கிறது! புதிய கல்வித் திட்டத்தைக் குழி தோண்டிப் புதைத்து இருக்கிறது.

நமது கழகத்திற்கு சோதனை ஏற்பட்ட நேரத்தில், கழகக் கொடி தாழ்ந்துவிடாமல், நிமிர்த்திப் பிடித்து, கம்பீரமாகப் பறக்க வழி செய்திருக்கிறது 'நம் நாடு'.

இதழ் பெரிதாக வேண்டும்; வனப்புள்ளதாக ஆக்கப்பட வேண்டும். 'படித்தத் திராவிடர் ஒவ்வொருவர் கரத்திலும் 'நம் நாடு' இடம் பெற வேண்டும்.

மூன்றும் ஆண்டிலாவது 'நம நாடு' இதழுக்கு அவ்வெற்றியைப் பெற்றுத்தர, நமது தோழர்கள் ஆவன செய்வார்கள் என நம்புகிறோம். 'நம் நாடு' வெற்றி, தோழர்களின் வெற்றியேயாகும்.

ஆசிரியர் குழாம், அச்சுக் கோர்ப்போர், கட்டுக்கட்டுவோர், கொண்டு செல்வோர், விற்பனையாளர், நிர்வாகத் துறையினர் ஆகிய அனைவருக்கும் 'நம் நாடு' சார்பில் நமது நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம். 'நம் நாடு' தனது கடமையை வெற்றிகரமாகச் செய்துவர ஆதரவு காட்டிவரும் தோழர்கள் அனைவருக்கும் நமது நன்றியையும் மகிழ்ச்சியையும் அறிவித்துக் கொள்கிறோம்.

# அகதிகள் சுகவாழ்வுக்கு!

## கல்கத்தாவில் காலனிகள்

ரூ. 10 கோடி செலவிட இந்தியப் பேரரசு முடிவு

கல்கத்தாவைச் சுற்றியுள்ள இடங்களில், அகதிகள் குடியேறுவதற்கென காலனிகளை அமைப்பதற்கு மூன்று முதல் 4 ஆண்டு காலத்தில் சுமார் ரூ. 10 கோடி செலவிட மத்திய அரசாங்க அகதிகள் புனரமைப்பு இலாகா திட்டமிட்டிருப்பதாகத் தெரியவருகிறது.

அந்தக் காலனிகளில் சுமார் 6 லட்சம் அகதிகள் வாழ முடியும்.

## இவ்வாண்டில் பதிவான புதுக் கம்பெனிகள்

மொத்தம் ரூ. 15,36,00,000 அங்கீகரிக்கப்பட்ட மூலதனத்துடன், பங்குகள் வரையறுக்கப்பட்ட 88 புதுக் கம்பெனிகள், 1955 பிப்ரவரி மாதத்தில் பதிவு செய்யப்பட்டன. 1954—55-ம் நிதி ஆண்டில் முதல் பதினொரு மாத காலத்தில் பதிவான கம்பெனிகளின் மொத்த எண்ணிக்கை இத்துடன் 1,067 ஆகிறது. இவற்றின் அங்கீகரிக்கப்பட்ட மூலதனம் மொத்தம் ரூ. 207.48 கோடி ஆகும்.

பரிசீலனை மாதத்தில், மொத்தம் 28 லட்சம் ரூபாய் செலுத்தப்பட்ட மூலதனங்கொண்ட 46 கம்பெனிகள் கலைக்கப்பட்டன. சென்ற ஆண்டில் மொத்தம் 9 லட்சம் ரூபாய் மூலதனம் கொண்ட 41 கம்பெனிகள் கலைக்கப்பட்டன.

# 10 கோடி ரூபாய் செலவில் சிந்திரி தொழிற்சாலை அபிவிருத்தி

## மேலும் 2000 பேர் வேலை பெறுவராம்!

பீகாரிலுள்ள சிந்திரி இரசாயன உர உற்பத்திச் சாலையைச் சுற்றி பகல் நேரங்களில் ஆரஞ்சு நிறத்துடனும், இராக்காலங்களில் சூரிய வெண்ணிறத்துடனும் காணப்படும் ஒளி, நாட்டின் இரசாயன எருக்களைப் பெருக்குவதற்குப் பயன்படுத்தப்பட இருக்கிறதாம்.

தினம் ஒன்றுக்கு 600 டன் கோக்கரி உற்பத்தி செய்கின்ற ரூ 2½ கோடி செலவில் கட்டப்பட்ட கோக் அடுப்புக்கு மேலே தப்பிச் செல்லும் செங்கிறமான நிலக்கரி வாயுவாம் இந்த ஒளி! தற்போது இதில் பெரும்பாகம் வீணாகிறது.

சிந்திரி தொழிற்சாலையில் தினம் ஒன்றுக்கு 960 டன் அமோனியம் சல்பேட் உற்பத்தி ஆகிறது.

கடந்த 1953-ல் அன்னிய நாடுகளுக்குச் சென்று பல தொழிற்சாலைகளைப் பார்வையிட்ட தொழில் நுணுக்க நிபுணர்கள் குழுவின் சிபாரிசின் பேரில் சிந்திரி தொழிற்சாலையை மேலும் விரிவுபடுத்த மத்திய சர்க்கார் முடிவு செய்துள்ளனராம்.

10 லட்சம் கன அடியுள்ள நிலக்கரி வாயுவை 400 டன் அமோனியம் நைட்ரேட் சல்பேட்டாகவும், 70 டன் உரியாவாகவும் மாற்றக் கூடிய புதிய தொழிற்சாலை ஒன்று இன்னும் 33 திங்களுக்குள் ஏற்படுத்தப்படுமாம். இதற்கான இயந்திர சாதனங்களை அமைக்க இத்தாலிய இரசாயன எஞ்சினீயர்கள் கம்பெனி ஒன்றிற்கு 7 கோடி ரூபாய்க்குக் 'காண்டிராக்ட்' விடப்பட்டிருக்கிறது. ரூ. 3 கோடி செலவில் கட்டடங்களும், இதர கருவி சாதனங்களும் அமைக்கப்படுமாம்.

தற்போது சிந்திரி தொழிற்சாலையில் பணியாற்றும் தொழிலாளர் எண்ணிக்கையான 6,700 பேர், இப்புதிய விரிவுபடுத்தும் திட்டத்தால் 8,700 பேராக இருப்பர்—அதாவது, இதன் மூலம் மேலும் இரண்டாயிரம் பேர் வேலை பெறுவர்.

தற்போது 3 லட்சம் டன் அமோனியம் சல்பேட் உற்பத்தி செய்யும் சிந்திரி தொழிற்சாலையின் உற்பத்தி சக்தி, அடுத்த ஐந்தாண்டுத் திட்டத்தில் 100-க்கு 60 வீதம் பெருக்கப்படும்.

சிந்திரி தொழிற்சாலை தவிர, பக்ரா—நங்கல் பிரதேசத்திலும் மற்றொரு பெரிய இரசாயன எரு உற்பத்திச்சாலை ஏற்படுத்தப்படுமாம். இத்தொழிற்சாலை காற்றிலிருந்து கிடைக்கும் மின்சார உதவியால் 2 லட்சம் டன் அமோனியம் நைட்ரேட்டை உற்பத்தி செய்யுமென்றும் கூறப்படுகிறது.

சிந்திரி தொழிற்சாலைக்காக ஆன மொத்தச் செலவு, மேலும் புது அபிவிருத்தித் திட்டத்திற்காகச் செலவிடப்பட இருக்கும் தொகையான ரூ 10 கோடியையும் சேர்த்துக் கணக்கிட்டால் மொத்தம் ரூ 36 கோடி ஆகும்.

# யோக்கியர்களுக்குப் பஞ்சம்?

இந்தியப் பேரரசின் உள்நாட்டு விவகார இலாகா, இலஞ்ச ஒழிப்பு இலாகா பிரிவுக்கு தகுதியான ஒரு தலைமை அதிகாரியை இன்னமும் தேடிக் கொண்டிருக்கின்றனராம்—கிடைத்தபாடில்லையாம்!

சென்ற ஆண்டு இறுதியில், எல்லா சர்க்கார் இலாகாக்களிலும் இலஞ்ச ஒழிப்பு நடவடிக்கைகள் மேற்கொள்வதற்கான ஆலோசனைகள் தருவதற்காக அம்மாதிரி ஒரு அதிகாரியை நியமிப்பதென முடிவாகியது; ஆனால், கடந்த ஆறு மாதங்களாகத் தேடியும், தகுதி பெற்றவர்களைக் காணமுடியவில்லையாம்!

# இந்தியாவிலிருந்து....!

## மோட்டார் கார் ஏற்றுமதி

முதன் முதலாக, இந்த ஆண்டு இறுதியில் இந்தியாவில் தயாரிக்கப்பட்ட மோட்டார் கார்கள் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படவிருக்கின்றன.

முதலில் பர்மா, இலங்கை ஆகிய நாடுகளுக்கு அவை ஏற்றுமதி செய்யப்படும் என்றும், அங்கு 'சந்தை' நிலைத்த பின்பு, இந்தோனேஷியா, மற்றும் மத்திய கிழக்கு நாடுகளுக்கு இந்திய மோட்டார்கள் ஏற்றுமதியாகும் என்றும் தெரியவருகிறது.

மோட்டார் கார்கள், 'டிரக்கு'கள் தயாரிப்பதற்கு அனுமதி பெற்றிருக்கிற 5 நிறுவனங்கள் சென்ற 1954-ம் ஆண்டில் 5,435 கார்களும், 9,027 டிரக்குகளும் தயாரித்தனர் என்று தெரிய வருகிறது.

## மதுவிலக்கு விசாரணைகுழு

ஜூலையில் சிபாரிசுகள்

மதுவிலக்கு விசாரணைக் குழு இப்போது தனது வேலைகளை முடிக்கும் தருவாயிலிருப்பதாகவும், வரும் ஜூலை முடிவுக்குள், திட்டக் குழுவிடம் தனது அறிக்கையை தாக்கல் செய்துவிடுமெனவும் தெரிகிறது. காங்கிரஸ் பொதுச் செயலாளரான ஸ்ரீமன் நாராயண் தலைமையில் உள்ள அந்த விசாரணைக் குழு தனது சிபாரிசுகளைத் தயாரித்துக் கொண்டிருப்பதாகத் தெரிகிறது.

## அவர்கள் 'போர்க்கோலம்'

ஜெய்ப்பூரில் நடைபெற்றுவரும் சிறு நிலப்பிரபுக்களின் கிளர்ச்சி காரணமாக இன்று 243 பேர், வேலைக்கு இடையூறு செய்ததாகவும், மறியல் செய்ததாகவும் கூறப்பட்டு கைது செய்யப்பட்டுள்ளனராம்.

## கன ரகத் தொழிற்சாலை

இந்தியாவில் கன ரக, மின்சார சாதனத் தொழிற்சாலைகளை நிறுவுவதில் இந்தியாவுடன் ஒத்துழைக்க அமெரிக்கா, பிரிட்டன், பெல்ஜியம், செக்கோஸ்லாவேக்கியா ஆகிய நாடுகள் தயாராக இருக்கின்றனவாம்.

கன ரக மின்சார சாதன தொழிற்சாலைகளை சர்க்கார் நடத்தும்.

## திரு. வி. க. நினைவுக் குழு

இந்தக் குழுவினரால் திரட்டப்பட்ட ரூ. 12,100 சென்னை ஷெனாய் நகரில், திரு. வி. க பெயரால் உயர்நிலைப் பள்ளி தொடங்கி நடத்துவதற்காக, அந்தப் பள்ளிக் கூடக் கமிட்டியாருக்கு அளிக்கப்பட்டது.

# 'திரு-கொச்சி சர்க்கார் சுறுசுறுப்பு!'

## பிரசவத்திற்குக் கோரிய 'லீவு'—குழந்தை பிறந்து 10 மாதங்களுக்குப் பிறகு தரப்பட்டது!

திருவனந்தபுரம், ஜூன் 12—திரு-கொச்சி மாநிலசர்க்காரின் பொது சுகாதார இலாகா எத்தனை 'சுறு சுறுப்'பாக வேலை செய்கிறது என்பதைத் தெரிந்துகொள்ளும் வாய்ப்பாக ஒரு நிகழ்ச்சி நடைபெற்றிருக்கிறது.

சுகாதார இலாகாவைச் சேர்ந்த பெண் ஊழியர் ஒருவர், தான் கர்ப்பம் தரித்திருந்த காலத்தில், பிரசவத்திற்கென 'ரஜா' கேட்டிருக்கிறார்.

ஆனால், பிரசவமாகி 10 மாதங்களுக்குப் பிறகு, அவருக்கு பிரசவத்திற்கென 'லீவு' தரப்பட்டிருக்கிறது!

அந்தப் பெண்மணியின் மனு, ஒரு கத்தை தஸ்தாவேஜுகளுடன், முதன் மந்திரி கோவிந்த மேனனுக்கு அனுப்பப்பட்டதாம்.

நான்கு நாட்களுக்கு முன், அவர், அந்த மனுவைப் பார்த்துவிட்டு, 'ரஜா' தர உத்திரவு பிறப்பித்ததுடன், 'இத்தனைசிக்கித்தில்'மனுவை பைசல் செய்ததற்கான காரண விளக்கம் தருமாறு கேட்டிருக்கிறார் எனவும் தெரிகிறது.



# பவுடர் பாலுக்கு மாற்றாக பதப்படுத்தப்பட்ட பால்!

## சென்னை சர்க்கார் தயாரிக்கும்

முதலமைச்சர் காமராசரின் யோசனை

"நிபுணர்கள் எதையும் ஒருமனதாக ஒப்புக்கொள்ளமாட்டார்கள்; மாறுபட்ட கருத்துக்களைத் தெரிவித்துக் கொண்டே இருப்பார்கள்; சர்ச்சைகள் கிளப்பி, விவாதம் நடத்தி, இறுதியில் ஒரு முடிவுக்கு வருவார்கள்; இந்த முறையை நான் ஆட்சேபிக்கவில்லை;

"ஆனால், இந்தப் பதப்படுத்தப்பட்ட பாலைப் பொறுத்தவரையில், 'இது நிபுணர்களின் சிபாரிசு—இந்தப் பால் கெடுதல் செய்யாது,'—என்று நன்கு எடுத்துக் கூறப்பட்டிருப்பினும், மக்களின் மனதில் சந்தேகம் தோன்றிக் கொண்டிருக்கும்;

"வேறு ஏதேனும் காரணங்களினால்—எங்காவது, யாருக்காவது தேக அசௌக்கியமோ அல்லது மரணமோ நேர்ந்தால், 'இந்தப் பால் சாப்பிட்டதுதான் காரணமாயிருக்குமோ' என்ற சந்தேகம் தோன்றிவிடக்கூடும்; எப்படியிருப்பினும், பால் கெடுதல் தரக்கூடியதல்ல என்பதை மக்களுக்குக் கூறுவது அவசியம்,"

—என்று, சென்னை சர்க்கார் பால் உற்பத்தி தொழிற்சாலையில், பதப்படுத்தப்பட்ட பால் உற்பத்தித் திட்டத்தை துவக்கிவைத்த விழாவின்போது முதன் மந்திரி காமராசர் குறிப்பிட்டிருக்கிறார்.

டாக்டர் ஏ. லட்சுமணசுவாமி தலைமையில் நியமிக்கப்பட்ட நிபுணர் குழு, பவுடர் பாலுக்குப் பதில் எருமைப் பால், அதே அளவு தண்ணீர், பசுவின் பால் தரத்துக்கு பசுவின் பாலைப் பண்படுத்தி அதையும் சேர்த்து 'டோன்ட்' பால் தயாரிக்குமாறு சிபாரிசு செய்திருந்தது.

அந்தச் சிபாரிசுப்படி 'டோன்ட்' பால் தயாரிக்கும் திட்டத்தை மந்திரி பக்தவத்சலம் துவக்கி வைத்திருக்கிறார்.

# எத்தனை நாளைக்குஇந்த எதிர்ப்புப் போர்வை?

## மதவெறியர்கள் ஒன்றாகப் போகிறார்களாம்!

'ஜன சங்', 'இந்து மகா சபை,' 'ராம ராஜ்ய பரிஷத்,' ஆகிய மத வெறி கொண்ட கட்சியினர், ஒன்றாகக் கூட்டுச் சேர்ந்து காங்கிரசிற்கு எதிரான பலமுள்ள ஒரு எதிர்க் கட்சியாக உருவாவது பற்றி, ஜன சங்கத்தின் செயர் குழுக் கூட்டம் விவாதித்து முடிவு செய்யுமாம்.

'ராம ராஜ்ய பரிஷத்,' அவ்வாறு ஒன்று சேருவதை ஆதரிப்பதாகவும், ஆனால், இந்து மகாசபையினர் முழுக்க முழுக்க ஐக்கியமாகிவிடுவதை ஆதரிக்கவில்லை என்றும் கூறப்படுகிறது.

தேர்தலுக்காகவும், வேறு சில காரியங்களுக்காகவும் மட்டுமே அத்தகைய ஒரு 'சேர்க்கை'யை தாங்கள் விரும்புவதாக இந்து மகா சபைப் பிரதிநிதிகள் தெரிவித்திருக்கின்றனராம்.

# 1945-ல் வீசப்பட்ட அணுகுண்டு—1955-லும் மக்களைக் கொல்கிறது!

## ஜப்பான் விஞ்ஞானிகள் தகவல்

"சுமார் 10 ஆண்டுகளுக்கு முன்னர், அதாவது 1945-ம் ஆண்டில் ஹிரோஷிமா, நாகசாகி ஆகிய நகரங்களின் மீது வீசப்பட்ட அணுகுண்டுகளின் காரணமாக ஏற்பட்ட ரேடியக் கிளர்ச்சிகளால் பாதிக்கப்பட்ட பலர் இன்னும் செத்து மடிந்துகொண்டே வருகிறார்கள். ரேடியக் கிளர்ச்சி அவர்களது உடலுக்குள் ஒட்டிக்கொண்டு அவர்களை சித்திரவதை செய்து, இறுதியில் கொன்று விடுகின்றன. அணுசக்தி தவறாக உபயோகிக்கப்படுமானால், அது மனித சமூகத்தின் அழிவைத் தேடித்தரும்,"

என்று, ஜப்பானில் கூடியுள்ள ஒன்பது நாடுகளின் அணுசக்தி நிபுணர் கூட்டமொன்றில், ஜப்பான் பிரதிநிதிகள் கூறியிருக்கின்றனர்.

அங்கு கூடிய நிபுணர்கள், அணு, நீர்வளிக் குண்டுகளின் மிகக் கொடிய விளைவுகள் பற்றித் தெரிந்துகொண்டுள்ளனராம்.

ரஷ்யாவிலிருந்து அன்று வி. காஸ்லோவ் என்ற விஞ்ஞானப் பேராசிரியை உட்பட, ஒன்பது நாட்டு விஞ்ஞானிகளும் இரண்டு வாரங்கள் கூடி, அணுசக்தி பற்றி ஆராய்வர் எனத் தெரிகிறது.

ஜப்பான் நாட்டு பிரதிநிதிகள், அணுகுண்டு தாக்குதலுக்கு ஆளாகி உயிர் தப்பியவர்கள் எந்த எந்த வகையிலெல்லாம் பாதிக்கப்படுகிறார்கள் — என்ன வகையான வியாதிகள் அவர்களை வாட்டுகின்றன என்பவற்றையெல்லாம் விளக்கிக் கூறியிருக்கின்றனராம்.

★

## நீர்வளிக் குண்டு தரும் வேதனை!

நீர்வளிக் குண்டு வெடித்த அதினின்றும் கிளம்பும் ரேடியக் கிளர்ச்சியுள்ள சாம்பல் விழும் பகுதிகளில் இருப்பவர்கள் குறைந்த அளவு ஒரு வார காலமாவது பூமிக்கடியிலேயே தங்கியிருந்தால்தான் அவர்கள் பிழைப்பார்கள் என்றும், நீர்வளிக் குண்டு வெடித்த 6 முதல் 9 மாத காலம் வரை 'உஷ்ணப் பிரதேசங்'களில் இருப்பது மிக ஆபத்தானதென்றும், கதிரியக்கம் இல்லாத குளிர்ச்சியான இடங்களுக்குச் சென்றவர்கள் பல நாட்கள் கழித்துத்தான் தங்கள் தங்கள் வீடுகளை விட்டு வெளியே வரலாமென்றும் பிரபல அணுசக்தி விஞ்ஞானி டாக்டர் ரால்ப் சிகாகோவில் கூறியிருக்கிறார்.

அமெரிக்காவில் மக்கள் பெருக்கம் மிகுந்துள்ள கிழக்குப் பகுதிகளில் குண்டு போடப்பட்டால், மற்ற நகரங்களிலிருக்கிறவர்களும், அவர்களைச் சுற்றிலும் உஷ்ணப் பிரதேசங்கள் இருப்பதால் வெளியே தலைகாட்ட முடியாதென்றும், இவ்விதம் ஒரு குண்டினால் பல நகரங்களிலுமுள்ளவர்கள் வெளியே தலைகாட்ட முடியாதபடி செய்யப்பட்டுவிடலாம் என்றும் அவர் கூறியிருக்கிறார்.

★

## அணுசக்தி விஞ்ஞானிகள் மாநாடு கூடுகிறது

450 பேர் கலந்து கொள்வர்

பைசா, (இத்தாலி)—

அணுசக்தி பற்றி இங்கு 6 நாட்கள் நடைபெற இருக்கும் மாநாட்டில் இரண்டு பிரபல ரஷ்ய அணுசக்தி விஞ்ஞானிகள் கலந்துகொள்கின்றனராம். அமெரிக்கா, பிரிட்டன், மற்றும் 18 நாடுகளிலிருந்து மொத்தம் 450 அணுசக்தி விஞ்ஞானிகள் இந்த மாநாட்டில் கலந்து கொள்வராம்.

இந்த மாநாட்டில் ரஷ்ய விஞ்ஞானிகள் பிரமாதமாக எதுவும் சொல்லிவிடப்போவதில்லை என்று மேற்கத்திய நாடுகளின் விஞ்ஞானிகள் கருத்தறிவித்துள்ளனராம்.

# 'நிற வெறி' முற்றுகிறது!

## பொது இடங்களில் 'இன ஒதுக்கல்' விரிவாக்க சட்டம்?

## கேப் மாநில நிர்வாகியின் கூற்று!

கேப்டவுன், ஜூன் 13—

"அலங்கார உடையணிந்த அழகான 'வெள்ளை இனப் பெண்கள், பஸ் நிலையத்தில், அசங்கியமான ஆப்பிரிக்கர்களுடன் 'கியூ' வரிசையில் நிற்க வேண்டுமென்பது தவறு,"

என்று, கேப் மாகாண நிர்வாகியான ஆலிவர் என்பார் கிறத்திமிர் கொண்டு பேசியிருக்கிறார்.

மாநில 'கவுன்சில்' கூட்டத்தில் அவர் பேசுகையில், பல்வேறு இனத்தவருக்கும் தனித் தனி பஸ் நிற்குமிடங்கள் ஏற்படுத்துமாறு தாம் சட்டமியற்றப் போவதாகக் கூறினாராம்!

ஸ்ட்ரீடம் தலைமையில் உள்ள தேசீய சர்க்காரால் நிர்வாகியாக நியமிக்கப்பட்டுள்ள அந்த நிற வெறியர், "எல்லாப் பொது இடங்களிலும் 'இன ஒதுக்கல்' கொள்கையை அமுல் செய்ய தமது புதுச் சட்டம் கட்டளையிடும்" என்றார்!

# ஆளில்லாத அஞ்சல் நிலையம்

சிம்லா மலைக் குன்றில் ஒரு சர்க்கார் பள்ளியின் தலைமை ஆசிரியர், ஆட்களே இல்லாத ஒரு தபால் நிலையத்தை திறந்துள்ளாராம்.

இந்தத் தபால் நிலையத்தில், தபால் தலைகள், அஞ்சலட்டைகள் போன்றவை அனைத்தும் வைக்கப்பட்டுள்ளதாம். ஏதாவது தேவைப்பட்டவர்கள் தங்களுக்குத் தேவையானவற்றை அங்கிருந்து எடுத்துக் கொண்டு, அவற்றிற்குரிய விலை மதிப்பை அருகிலுள்ள பணப் பெட்டி ஒன்றில் போட்டுச்செல்ல வேண்டுமாம்,

இந்தத் தபால் நிலையம், அப்பகுதியிலுள்ள மக்களின் 'நாணயத்'தையும் 'நேர்மை'யையும் பரிசோதனை செய்யவே வைக்கப்பட்டுள்ளதென்றும், கடந்த ஒருஆண்டு காலமாக இத்திட்டம் வெற்றிகரமாகவே நடைபெற்று வருவதாகவும் அறிவிக்கப்பட்டிருக்கிறது.

## இஸ்லாமியப் பேராசிரியர் மீது குற்றச்சாட்டு

கெய்ரோ, ஜூன் 13—

இங்குள்ள இஸ்லாமிய பல்கலைக் கழகத்தின் மதப் பேராசிரியரான ஷேக் அப்துல் ஹமீத் பக்த், ரம்சான் அன்று உபவாசமிருக்க வேண்டுமென்ற கட்டாயம் கிடையாதென அறிக்கைகள் வெளியிட்டதற்காக அடுத்த ஞாயிறன்று பல்கலைக் கழக நீதிமன்றம் ஒன்றில் விசாரிக்கப்படுவார் என்றும், அவர் மீது ஏழு குற்றங்கள் சுமத்தப்பட்டிருக்கின்றன என்றும் தெரிய வருகிறது!

# பிச்சைக்காரர்கள் பிரச்சினை

சென்னை நகரிலுள்ள பிச்சைக்காரர்களின் பிரச்சினை குறித்து சென்னை சமூகப்பணி பள்ளியைச் சேர்ந்தவர்கள் இத்திங்கள் மத்தியிலிருந்து 'விரிவான' ஆராய்ச்சிகள் நடத்த இருக்கின்றனராம்.

பிரச்சினை குறித்த வேலைகள் திட்டக்குழுவின் சார்பில் நடைபெறும் என்றும், இத்திட்ட வேலைகளுக்காக ரூ. 10,000 மானியம் தரப்படும் என்றும் தெரிகிறது. இது தவிர, பிச்சைக்காரர்களின் புனர்வாழ்வமைப்பிற்காக இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் செயல்முறைகள் மேற்படி பள்ளியின் சிபாரிசுகளை ஆதாரமாகக் கொண்டிருக்குமாம்.

சென்னை நகரில் மட்டும் சுமார் 7,500 பிச்சைக்காரர்கள் இருப்பதாகக் கணக்கிடப்பட்டிருக்கிறது.

இந்தப் பிச்சைக்காரர்கள் அனைவரும் பிச்சை எடுக்கவேண்டியதற்கான காரணம் என்ன என்பது பற்றி மேற்படி பள்ளியினர் 'விரிவாக' ஆராய்ந்து கண்டறிவர் என்றும், இதற்காக,மேற்படி ஆராய்ச்சியாளர்கள் பிச்சைக்காரர்களைப் பேட்டி காண்பர் என்றும் கூறப்படுகிறது.

சென்னை சமூகப்பணி பள்ளியின் நிர்வாகியான பி. டி. தாமஸ் என்பவரின் மேற்பார்வையில் மேற்படி ஆராய்ச்சி நடைபெறும் என்றும், ஆராய்ச்சியின் முடிவு 5 மாத காலத்திற்குள் தெரிந்துவிடுமென்றும் தெரிகிறது.

# ம. சோ. கட்சியில் உள்ளடிக் குழப்பம்

## தலைமைக்கு எதிராக லோகியா 'போராட்டம்'

"ம. சோ. கட்சியின் தேசிய நிர்வாகக் குழுவை எதிர்த்துப் போராட வேண்டும்; அவர்களைப் பதவியிலிருந்து நீக்க வேண்டும்," என்று, இந்தியாவிலுள்ள ம. சோ. கட்சி உறுப்பினர்களைக் கேட்டுக் கொள்வதாக, காஜிப்பூர் ம.சோ. கட்சி மாநாட்டில் டாக்டர் லோகியாவால் கொண்டுவரப்பட்ட தீர்மானம் நிறைவேற்றப்பட்டதாகத் தெரியவருகிறது.

இந்த மாநாட்டை நடத்தக் கூடாதென கட்சியின் தலைமைப்பீடம் உத்திரவிட்டிருக்கிறது; ஆனால், அந்தத் தடையை மீறி, நீக்கப்பட்ட உத்திரப் பிரதேச ம. சோ. கட்சி நிர்வாகக் குழு, இந்த மாநாட்டை நடத்தியிருக்கிறது.

'பார்லிமெண்டரி போர்டு' தேர்ந்தெடுக்கப்படுமெனவும், அடுத்த தேர்தலுக்கான ம. சோ. கட்சி அபேட்சகர்கள் பொறுக்கி எடுக்கப்படுவார்களெனவும், நீக்கி வைக்கப்பட்டுள்ள உ. பி. கட்சியின் தலைவரான சாக்சேனா கூறியிருக்கிறார்.

"சட்டத்திற்குப் புறம்பானதும் எதேச்சாதிகாரமானதுமான நடவடிக்கைகளை எடுப்பதின் மூலம் ம. சோ. கட்சியின் தலைமைப்பீடம் நாட்டின் சோஷலிச இயக்கத்தின் எதிர்காலத்தை பாழாக்கிவிட்டது" என்று, ம. சோ. கட்சியிலிருந்தும் நீக்கி வைக்கப்பட்டுள்ள அங்கத்தினர் மதுலிமாயி குற்றஞ்சாட்டி இருக்கிறார்.

★

## 'நடவடிக்கை இல்லை!'

லட்சுமணபுரி, ஜூன் 13—

ம. சோ. கட்சியின் தலைமைப் பீடத்திற்கு எதிராகப்போராட்டம் நடத்தும் டாக்டர் ராம் மனோகர் லோகியா மீது ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப்படுமா?" என்று தலைவர் நரேந்திர தேவ் கேட்கப்பட்டபோது, "இல்லை; எப்போது கட்டாயமாக நடவடிக்கை தேவையோ, அப்போது அதனை மேற்கொள்ளுவதிலேயே நான் நம்பிக்கை உள்ளவன்," என்று பதிலளித்திருக்கிறார்.

# இங்குபோல் அங்கும் இருக்கின்றனர்

## அகாலிதள கிளர்ச்சிக்கு எதிர்ப்புக் கிளர்ச்சி

அமிர்தசரஸ், ஜூன் 13—

மொழிவாரி மாநிலக் கோரிக்கையை வெளியிடும் ஒலி முழக்கங்களுக்கு சர்க்கார் விடுத்துள்ள தடை உத்திரவை எதிர்த்து அகாலிதளத்தவர் கிளர்ச்சி நடத்துவதைக் கண்டித்து, அமிருதசரசில் நடைபெற்ற தேசீய சீக்கியர்கள் கூட்டம் ஒன்றில் தீர்மானம் ஒன்று நிறைவேற்றப்பட்டிருக்கிறது. இத்திங்கள் 26-ந் தேதி யன்று ஆரம்பிக்க உத்தேசிக்கப்பட்டிருக்கும் எதிர்ப்பு கிளர்ச்சிக்குத் தீவிர ஆதரவு அளிக்கப் போவதாகவும் உறுதி அளிக்கப்பட்டிருக்கிறதாம்.

அகாலிதளத்தவரான சீக்கியர்கள், தங்கள் ஆர்ப்பாட்டத்திற்கு குருத்துவாரத்தை உபயோகிக்கக் கூடாதென்பதே 'எதிர்ப்புக் கிளர்ச்சிக்காரர்'களான தேசிய சீக்கியர்களின் கோரிக்கையும் நோக்கம் என்று கூறப்பட்டிருக்கிறது.

# நிசாமின் மாளிகை!

## ரூ. 55 லட்சத்திற்கு விற்பனை

ஐதராபாத், ஜூன் 12—

பேபியன் கடற்கரை சாலையில் உள்ள 'ஐதராபாத் மாளிகை'யை மாநில சர்க்கார், ரூ 55 லட்சத்திற்கு விற்றுவிட்டனர் என்று தெரிகிறது.

கோலாப்பூர் முன்னாள் திவானான ஆர். பி. சூர்வே என்பவர் அதனை வாங்கியுள்ளாராம்.

ஐதராபாத் சர்க்காருக்கு இன்னும் லண்டன், உதகமண்டலம், டில்லி இவற்றில் சொத்துக்களிருக்கின்றன. அவற்றை விற்று, கிடைக்கும் பணத்தை மாநில அபிவிருத்திக்காக உபயோகிக்க உத்தேசித்துள்ளனர் எனவும் தெரிகிறது.

# ஒரு மறுப்பு

"16—6—55 மாலை 6 மணிக்கு சென்னை, எழுமினாறு தெருவில் 9-வது வட்ட தி. மு. கழக சார்பில் பொதுக்கூட்டம் நடைபெறும் என்றும், பொதுக் கூட்டத்தில் அண்ணா அவர்களும், பொதுச் செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்களும் சொற்பொழிவாற்றுவார்கள் என்றும் ஒரு துண்டு வெளியீடு யாரோ சிலரால் வெளியிடப்பட்டிருக்கிறது.

"அந்த வெளியீட்டிற்கும், 9-வது வட்ட கிளைக் கழகத்திற்கும் யாதொரு தொடர்பும் கிடையாது என்பதை இதன் மூலம் அறிவித்துக் கொள்கிறோம்.

"கழகத் தொடர்பும், அனுமதியும் இன்றி மேற்படி துண்டு அறிக்கை வெளியிடப்பட்டிருக்கிறது. இம்முறை கழகக் கட்டுப்பாட்டை மீறுவதுமின்றி பொது மக்களுக்கும் மிகுந்த ஏமாற்றத்தையும் அளிக்கும் எனவே, இத்தகைய முறையை மீண்டும் கைக்கொள்ளாமல் இருக்குமாறும், கழகத்தோடு ஒத்துழைக்குமாறும் கேட்டுக்கொள்ளுகிறோம்" என்று, சென்னை 9-வது வட்டக் கிளைச் செயலாளர் தோழர் வி. முனுசாமி அறிவித்துக்கொள்கிறார்.

# ஆந்திர காங்கிரசில் கோஷ்டிச் சண்டை!

## கோபாலரெட்டி பதவிக்கு ஆபத்து!

### மந்திரி பதவிகள் மாங்காய் வியாபாரமாகின்றன!

ஆந்திர பிரதேச காங்கிரசில் பலர் எதிர்பார்த்ததைப் போன்றே, வேறு எல்லா மாநிலங்களிலுமிருப்பதைப் போன்றும், என்னதான் 'ஒட்டு'ப் போட்டுத் தைத்துவிட்டதாகக் கூறப் பட்டாலும் வெடிப்புகள் தோன்றிக் கொண்டுதானிருக்கின்றன.

பிரதேச காங்கிரஸ் தலைவர் தேர்தலில் என். ஜி. ரங்கா தோற்றுப்போனது பல காங்கிரஸ் எம்.எல்.ஏ.-க்களுக்கு எரிச்சலைத் தந்திருக்கிறது; ஆகவே, அவர்கள், முதன் மந்திரி கோபால ரெட்டி தொடர்ந்து சட்டசபைக் காங்கிரஸ் தலைவராக இருப்பதற்கு ஆதரவு தருவதா, வேண்டாமா என்பது குறித்து யோசித்துக் கொண்டிருக்கிறார்களாம்.

கிருஷ்ணா, குண்டூர் மாவட்டங்களைச் சேர்ந்த காங்கிரஸ் எம்.எல்.ஏ.-க்கள், கோபால் ரெட்டியாருக்குப் பதிலாக வேறு யாரைத் தலைவராகக் கொள்வது என்பதைப் பற்றி தனிப்பட்ட முறையில் கூடி ஆலோசனை நடத்தியதாகவும் தெரிய வருகிறது.

இந்தக் காங்கிரஸ் எம்.எல்.ஏ.-க்களும், முன்னாள் கிருஷிக்லோக் கட்சியைச் சார்ந்தவர்களும் கடைசி நிமிடம் வரை, என். ஜி. ரங்கா வெற்றி பெற்றுவிடுவார் என்று நம்பிக்கிடந்தனராம்.

இறுதியாக கோபால் ரெட்டி, தனித்து நிற்கப் போவதாக அறிவித்ததினாலேயே ரங்காவிற்கு தோல்வி ஏற்பட்டதாயும், கோபால் ரெட்டி சட்டசபைக் காங்கிரஸ் கட்சித் தலைவரானதற்கே தாங்கள் தான் காரணமாயிருந்ததாகவும், அவர் இப்போது ரங்காவின் காலை வாரி விட்டு விட்டதாகவும் பொருமிக்கொண்டிருக்கின்றனர்.

கோபால் ரெட்டி தனித்து நிற்கப் போவதாக அறிவித்தது, பலருக்கு—மந்திரிகளுக்கேகூட ஆச்சரியமாயிருந்ததாயும், கோபால் ரெட்டியே ரங்காவின் பெயரை தலைமைப் பதவிக்கு பிரேரிப்பார் என்று நம்பப்பட்டதாயும் தெரிய வருகிறது.

எம். எல். ஏ.-க்களில் 25 பேர்களுக்கு அதிகமானோரும், பல மாநில காங்கிரஸ் உறுப்பினர்களும், கோபால் ரெட்டியின் துரோகத்தைத் தொடர்ந்து, மேற்கொண்டு என்ன செய்வதென விவாதித்துக் கொண்டிருப்பதாக அறிவிக்கப்பட்டிருக்கிறது.

கோபால் ரெட்டி தங்களுக்குச் செய்த 'துரோகம்,' தங்களை அவரது தலைமைப் பதவிக்கு எதிரான 'புரட்சி'யில் ஈடுபடத் தூண்டுவதாகவும் அவர்கள் கூறுகின்றனராம்.

ஏ. சத்தியநாராயண ராஜு கட்சித் தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்ட மறுநாள், விஜயவாடாவுக்கு வருகை தந்த கோபால ரெட்டியை ரங்கா குழுவினர் சட்டை செய்யவே இல்லையாம்; எவரும் சென்று அவரைப் பேட்டி காணவும் இல்லையாம்.

இந்த விளைவுகளைத் தொடர்ந்து கோபால ரெட்டி, இப்போது, சஞ்சீவி ரெட்டி கோஷ்டியினரின் ஆதரவேனும் தமக்குத் தொடர்ந்து கிடைப்பதற்காக, நெடுநாட்களாகத் தாமதிக்கப்பட்டு வந்த மந்திரி சபையை விரிவுபடுத்தும் வேலையை மேற்கொள்வார் என்றும், சஞ்சீவி ரெட்டி கோஷ்டியில் மேலும் ஒருவருக்கு மந்திரி பதவி தரப்படக்கூடும் என்றும் கூறப்படுகிறது.

## குடந்தையில் பொதுச்செயலாளர்

"18—6—55 அன்று, கும்பகோணத்தில், பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்கட்கு மாவட்டக் கழகச் சார்பில் வரவேற்பளிக்கப்படும். பொதுச் செயலாளரை வரவேற்க மாவட்டக் கிளைக் கழகச் சார்பில் பிரதிநிதிகள் அனைவரும் கழகக் கொடிகளுடன் வரவேண்டுமாறு கேட்டுக் கொள்கிறேன்,"

என்று, குடந்தை நகர தி.மு.கழகச் செயலாளர் சு. பத்மனாபன் அறிவிக்கிறார்.

தி. மு. க. பொதுச்செயலாளர்

## இரா. நெடுஞ்செழியன் காரை வருகை

21—6—55 அன்று, பொதுச் செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள் காரைக்காலுக்கு வர இசைந்துள்ளார். ஆகலால், அன்று மாலை 4 மணிக்கு மாபெரும் ஊர்வலமும், 6 மணியளவில் பொதுக்கூட்டமும் நடத்த ஏற்பாடு செய்யப்பட்டுவருகிறது.

## பாதகம் செய்யாதீர்!

### சியாங்கின் அழு நரல்

ஜினிவாவில் கூடவிருக்கும் நான்கு வல்லரசுகள் மாநாட்டில், தேசீய சீனவுக்குப்பாதகமாக எதுவும் செய்யக்கூடாதென தேசீய சீன 'மக்கள் சபை' மூன்று மேற்கு வல்லரசுகளுக்கும் தந்தி அனுப்பியிருக்கிறதாம்.

## சேலம் மாவட்டக் கிளைக் கழகங்கட்கு

"நம் மாவட்டத்தில், மாநில மாநாட்டுப் பங்குத் தொகையை இன்னும் பல கிளைகள் அனுப்பி வைக்காதது வருந்தத்தக்கதாயிருக்கிறது. தங்கள்பங்கை அனுப்பிவைக்காமலேயே பல கிளைகள் அண்ணா அவர்களின் கூட்டம் தங்கள் ஊரில் நடத்த ஏற்பாடு செய்ய வேண்டுமென மாவட்டக் கழகத்திற்குத் தபால் எழுதிக்கொண்டிருக்கின்றன.

"அண்ணா அவர்களின் கூட்டம் தங்கள் ஊரில் நடைபெற வேண்டும் என்று விரும்பும் கிளைக் கழகங்கள், முதலில் அதனதன் பங்கை மாவட்டப் பொருளாளருக்கு அனுப்பிவிட்டு, பிறகு அண்ணா அவர்கள் கூட்டம் பற்றி மாவட்டக் கழகத்திற்கு எழுதுமாறு வேண்டுகிறேன். 'கூட்டத்தின் போதே அண்ணா அவர்களிடம் பங்கைக் கொடுத்து விடுகிறோம்' என்பது ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாது.

"நம் மாவட்டத்தின் பங்கு ரூ, 2,000 சேர்ந்தால்தான் அண்ணா அவர்களின் சுற்றுப்பயணம் நம் மாவட்டத்தில் நடைபெற ஏற்பாடு செய்யப்படும். ஆதலால் கிளைக்கழகங்கள் இனியும் தாமதமின்றி தங்கள் பங்குத் தொகைகளை, 'பி. எம். குப்புசாமி, பொருளாளர், சேலம் மாவட்ட தி. மு. க., பெரியாம்பட்டி, பெரியாண்ணஹள்ளி (அஞ்சல்), ஜோலார்பேட்டை ஆர். எம். எஸ். (வழி)' என்னும் முகவரிக்கு அனுப்பி வைக்க வேண்டுமாறு கேட்டுக்கொளகிறேன்,"

என்று சேலம் மாவட்ட மாநில மாநாட்டு நிதிக் குழுச் செயலாளர் தோழர் ப. இராமலிங்கம் அறிவிக்கிறார்.

## தஞ்சைமாவட்ட கிளைக் கழக செயலாளர்கட்கு

"18—6—55 சனியன்று, குடந்தையில், மாவட்டக் கழகச் சார்பில் பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்களுக்குப் பாராட்டுக் கூட்டம் நடத்தவும், மாநில மாநாட்டுக்கு நிதியளிக்கவும் ஏற்பாடாகியிருக்கிறது. இதுவரை நிதியனுப்பாத கிளைகள் 17—6—55-க்குள் மாவட்டச் செயலாளருக்கு அனுப்ப வேண்டப்படுகிறார்கள். தவறினால் குடந்தை நிதியளிப்பு விழாவில் தன்னிடம் தரவும்,"

என, தஞ்சை மாவட்டச் செயலாளர் தோழர் என். எஸ். இளங்கோ அறிவிக்கிறார்.

### ஒத்திவைப்பு

18—6—55 காலை, தெ. ஆ. மாவட்டம், உளுந்தூர்பேட்டையில் அண்ணா அவர்கள் தலைமையில் நடைபெற இருந்த ஆண்டு விழா—பெயர் சூட்டு விழா நிகழ்ச்சிகள் ஒத்திவைக்கப்பட்டிருக்கிறது.

## விசைத் தறிகளுக்கு சலுகை

### அனுமதிக் கட்டணம் குறைக்கப்படுகிறது

"10-க்கும் குறைவாக விசைத் தறிகள் வைத்திருந்தால், 'அனுமதி'க் கட்டணம் ஒரு ரூபாய்; 25 தறிகளுக்குக் குறைவானால் கட்டணம் ரூ 5; 100 தறிகளுக்குக் குறைவானால் கட்டணம் ரூ. 10-விதிக்கப்படும்," என்று இந்தியப் பேரரசு வெளியிட்டுள்ள அறிக்கை ஒன்று கூறுகிறது.

'அனுமதிக்கட்டணக்குறைப்பை உடனடியாக அமுல் செய்ய மத்திய 'எக்சைஸ் கலெக்டர்'கள் அனைவருக்கும் உத்திரவு பிறப்பிக்கப்பட்டுள்ளது.

ஏற்கனவே முழுக் கட்டணமான ரூ. 100 வசூலிக்கப்பட்டிருந்தால், கட்டணக் குறைப்பின்படி உரிய கட்டணம் போக பாக்கியைத் திருப்பித்தர வேண்டும் என்றும் உத்தரவிடப்பட்டுள்ளது.

# சிங்கப்பூர் வேலை நிறுத்தம்

## 70,000 பேர் ஈடுபட்டிருப்பதாக இடதுசாரிகள் அறிவிப்பு

### தொழிற் சங்கத் தலைவர்கள் கைது செய்யப்பட்டதின் எதிரொலி

சிங்கப்பூர், ஜூன் 14—

இங்கு கம்யூனிஸ்டுகள் என்று சந்தேகப்பட்டு சர்க்கார் கைது செய்த ஆறு சீன தொழிற் சங்க மாணவ தலைவர்களை விடுதலை செய்யும் வரை வேலைக்குத் திரும்பமாட்டோம் எனக் கோரி, 70,000 தொழிலாளர்கள் பிரம்மாண்டமானதோர் வேலை நிறுத்தத்திலீடுபட்டிருப்பதாக இடதுசாரி தொழிற் சங்கங்கள் அறிவித்திருக்கின்றன.

சிங்கப்பூர் முழுவதும் போக்குவரத்து சாதனங்கள் செயலற்று விட்டன எனறும், நகரெங்கும் போலீஸ் பாதுகாப்பு ஏற்பாடு செய்யப்பட்டிருப்பதாயும் கூறப்படுகிறது.

தனிப்பட்டவர்களின் கார்களும், சைக்கிள் ரிக்ஷாக்களும் மட்டுமே நகர வீதிகளில் ஓடிக்கொண்டிருந்தன.

சுமார் 1560 வாடகை மோட்டார் ஓட்டிகள் தாங்கள் வேலை நிறுத்தம் செய்யவில்லை என்றும், ஆனால் வேலைக்குச் செல்லக்கூடாதென அச்சுறுத்தப்பட்டதாகவும் கூறியிருக்கின்றனராம்.

நாளையதினம் போலீஸ் பாதுகாப்புடன், வாடகை மோட்டார்கள் ஓட்டப்படும் என்று தெரிய வருகிறது.

சுமார் 73 நிறுவனங்களைச் சேர்ந்த 15,216 பேர் மட்டுமே வேலைக்கு வரவில்லை என்று சர்க்கார் தெரிவித்திருக்கிறதாம்.

## கிரகணத்தன்று விடுமுறை?

### வழக்கம் கைவிடப்பட்டதாக சென்னை பிரதம செயலாளர் அறிவிப்பு

வருகிற 20-ந் தேதியன்று சூரிய கிரகணம் ஏற்பட இருப்பது ஏற்கனவே அறிவிக்கப்பட்டுள்ளது.

இந்தக் கிரகணத்தைப் பார்வையிடக்கூடாதென விஞ்ஞானிகள் அச்சுறுத்தியிருப்பதும், அதையொட்டி சர்க்கார் காரியாலயங்களில் விடுமுறை அளிக்கப்பட இருப்பதும் தெரிந்ததே.

ஆனால் சர்க்கார் பிரதம காரியதரிசி கே. இராமுண்ணி மேனன் சூரிய கிரகணத்திற்குச் சர்க்கார் விடுமுறை கிடையாது என்றும், கிரகணத்திற்கு விடுமுறை அளிக்கும் வழக்கம் எப்போதோ கைவிடப்பட்டு விட்டதென்றும் கூறியிருக்கிறார்.

சென்ற ஆண்டில் ஏற்பட்ட சூரியகிரகணத்தைப் பார்வையிட்ட சிலர் கண் கெட்டுக் குருடர் ஆனார்கள் என்பதற்காகவே விஞ்ஞானிகள் இந்தக் கிரகணத்தைப் பார்க்கக்கூடாதென்று தெரிவித்திருக்கின்றனராம்.

### மேகம் மறைத்தால்......?

இலங்கையில் சூரியகிரகணத்தின்போது மேகங்கள் சூரியனை மறைத்துவிட்டால், அங்கு செல்ல இருக்கும் பல நாடுகளைச் சேர்ந்த விஞ்ஞானிகளும், வான ஆராய்ச்சியாளர்களும் 'பெருத்த ஏமாற்ற'த்திற்குட்படக்கூடும் என கூறப்படுகிறது.

இலங்கை செல்ல இருக்கும் இந்திய ஆராய்ச்சிக் குழுவினர் விசேட 'காமிரா'க்களுடன் செல்ல இருக்கின்றனராம்!

## மோட்டார் பந்தய விபத்து

### பலியானோர் எண்ணிக்கை 82

பாரிஸ் ஜூன் 14—

பிரான்சில் நடைபெறும் எல்லா மோட்டார் ரேஸ்களும், நிறுத்தப் பட்டுவிட்டனவாம்.

நேற்று முன்தினம் நடைபெற்ற லாமன்ஸ் மோட்டார் விபத்தில், இதுவரை 82 பேர் பலியாகிவிட்டனர்; காயம்பட்ட 105 பேரில் 73 பேர் மருத்துவ மனையில் உள்ளனர்; 8 பேர்கள் கை அல்லது கால் துண்டிக்கப்பட்டு முடமாகி விட்டனர் என்று தெரிகிறது.

23 பேருக்கு மண்டையில் பலத்த அடி என்றும், 26 பேர்களுக்கு எலும்பு முறிந்திருப்பதாகவும் கூறப்படுகிறது.

### விசாரணையும்—முடிவும்

லாமன்ஸ் கார் 'ரேஸ்' விபத்து பற்றி விசாரணை செய்ய, இன்று பிரெஞ்சு மந்திரி சபை கூடியது.

மோட்டார் பந்தயம் கடுமையான விதிகளுக்கு ஆட்படுத்தப்பட்டு நடத்தப்பட வேண்டுமென மந்திரி சபை முடிவெடுத்ததாம்.

## ஏன் இந்த பயம்?

தீண்டாமை ஒழிப்பிற்காக சென்னை சர்க்கார் வெளியிட்டுள்ள பிரச்சாரச் சுவரொட்டிகளில் இரண்டு ரகங்களை இனி எங்கும் ஒட்ட வேண்டாம் என்றும், இது வரை ஒட்டியவைகளை அப்படியே விட்டுவிடலாம் என்றும் எல்லா சர்க்கார் இலாகாக்களையும் மாநில அரிசன நலன் இலாகா டைரெக்டர் கேட்டுக்கொண்டுள்ளார் எனத் தெரிய வருகிறது.

# பாகிஸ்தான் குடியரசாகும்?

## எட்டாவது சுதந்திர தின விழா அறிவிப்பு

கராச்சி, ஜூன் 14—

பாகிஸ்தான், எட்டாவது சுதந்திர தினக் கொண்டாட்டத்தை ஒட்டி ஆகஸ்டு 14-ம் நாளன்று, ஒரு சுதந்திரக் குடியரசாகப் பிரகடனப்படுத்தப்படக்கூடும் என்று தெரியவருகிறது.

முர்ரீ எனுமிடத்தில், வரும் ஜூன் 29-ந் தேதியன்று கூடவிருக்கும் அரசியல் நிர்ணய சபை கூட்டத்தில், பாகிஸ்தானின் அரசியல் அந்தஸ்து, மேற்கு பாகிஸ்தான் ஒரே அங்கமாக இணைக்கப்படுவது முதலிய விஷயங்களுக்கு முதல் முக்கியத்துவம் தரப்படும் எனத் தெரிகிறது.

புதிய அரசியல் சட்ட நகல் பிரதிகள் அச்சாகிவிட்டன என்றும், தேர்தல் முடிந்ததும் அங்கத்தினர்களுக்கு அவை தரப்படும் என்றும் தெரியவருகிறது.

## வியட்நாமில்!

### மாமல்லபுரக் காட்சிகள்

சிங்கப்பூர், ஜூன் 14—

"வியட்நாமிலுள்ள சில குறிப்பிட்ட இடங்கள், இந்தியாவிலுள்ள சென்னை நகரையடுத்துள்ள மாமல்லபுரத்தை நினைப்பூட்டுவதாக இருக்கின்றன; இந்த இடங்களிலுள்ள கல்வெட்டுக்களும், சிற்பங்களும் மாமல்லபுரத்தில் பல்லவர் காலத்தில் கட்டப்பட்டுள்ளவைகளின் 'பாணி'யில் இருக்கின்றன." என்று, இலங்கை பல்கலைக் கழகத் தமிழ்த் துறை அறிஞர் ஒருவர் கூறியிருக்கிறார்.

சென்ற வாரம் இவர், தென்கிழக்கு ஆசிய நாடுகளில் தமிழின் கலாச்சாரப் பரவல் குறித்து ஆராய்ச்சி நடத்தும் நோக்குடன் இலங்கையிலிருந்து இந்தோனேஷியாவுக்குச் சென்றார்.

"இந்தியக் கல்லூரிகளில் உள்ள சரித்திரப் பேராசிரியர்களும், போதனாசிரியர்களும் தென்கிழக்கு ஆசிய நாடுகளில் 'விசால இந்தியா'வைக் காணப் பிரயாணம் செய்ய வேண்டும்," என்றும் அவர் கேட்டுக் கொண்டுள்ளாராம்.

1953—54ல், புகையிலை சாகுபடி விஸ்தீர்ணம் 8,18,000 ஏகராக இருந்தது, 1954—55ல், சுமார் 8,38,000 ஏகராவாக உயர்ந்துவிட்டது; அதாவது சாகுபடிப் பரப்பு சுமார் 24 சதவிகிதம் அதிகரித்திருக்கிறது.

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம். ஏ., அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப் பெற்று, (24, சூரியநாராணய செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன், எம். ஏ.

